

# சீருடை

கடைக்குள் நுழைந்தவனின் பயந்த தோற்றத்தை வைத்து அவன் என்ன கேட்பான் என்று தெரியவில்லை. லலிதா, தமிழரசியின் முகத்தைப் பார்த்தாள். தமிழரசி அந்த ஆள் பக்கம் நகர்ந்து, “என்ன வேணும் சார்?” என்று கேட்டாள்.

“ஸ்கூல் யூனிபார்ம் இருக்கா?”

“எந்த ஸ்கூல் யூனிபார்ம், சார்?” தமிழரசி அந்தப் பேட்டையிலுள்ள இரு பள்ளிகளின் பெயரைச் சொன்னாள். அது அவள் கவனிக்க வேண்டிய விற்பனைதான்.

“இது பையங்க யூனிபார்ம். காக்கி பாண்ட், வெள்ளை ஷர்ட். ஷர்ட் மட்டும் வேணும்.”

அப்போதுகூட முதலாளி வாசனை பீடா சுவைத்த வண்ணம் கடை நுழைவாயிலுக்குப் பக்கத்தில் போட்டிருந்த சிறிய மேஜைக்குப் பின்னால் உட்கார்ந்து கொண்டான். லலிதா விலகிப் போய் புடவைகள் அடுக்கி வைத்திருந்த அலமாரியிடம் போய் நின்றாள்.

“என்ன சைசுங்க?” என்று தமிழரசி கேட்டாள்.

“பன்னெண்டு வயசுப் பையன். நல்ல உசரமா இருப்பான்.”

தமிழரசியால் உயரமான பன்னிரண்டு வயதுப் பையனை உருவகப்படுத்திக்கொள்ள முடியவில்லை. “22 சைஸ் சரியாயிருக்குமா?” என்று கேட்டாள்.

“பையனுக்கு வயசு பன்னெண்டுன்னு சொன்னேனே?”

கடை முதலாளி, “ஏய், 24 சைஸ் ஷர்ட் எடுத்துக் காமி” என்றான்.

தமிழரசி பீரோவிலிருந்து ஒரு அட்டைப் பெட்டியை எடுத்தாள்.

வந்தவன் சட்டையைத் தயக்கத்துடன் எடுத்துப் பிரித்துப் பார்த்தான். "இது ரொம்பப் பெரிசா இருக்குமில்லே?" என்று கேட்டான்.

தமிழரசி அப்படியே நின்றாள்.

"என்ன விலை?"

தமிழரசி சட்டையின் காலரைத் தூக்கிப் பார்த்தாள். "நாப்பத்தெட்டு ரூபாய்" என்றாள்.

வந்தவன் திடுக்கிட்டான்.

"இது டெர்ரிகாட் சார். நீங்களாத் தைச்சீங்கன்னா அறுபது ரூபாய்க்குக் குறையாது."

அவன் திரும்பிப் போக எத்தனித்தான். முதலாளி தமிழரசியிடம், "ஏய், இங்கே குடு அதை" என்றான்.

தமிழரசி சட்டையை முதலாளியிடம் கொடுத்தாள். "இரண்டு ரூபா குறச்சிக்கோ சார். நாப்பத்தாறு கொடு" என்றான்.

"நாப்பத்தாறுல்லே எனக்கு பாண்ட், ஷர்ட் இரண்டும் முடியணும்."

"அப்போ காட்டன்லே பாக்கிறியா? ஏய், சாருக்கு காட்டன் ஷர்ட் எடுத்துக் காமி" என்று முதலாளி தமிழரசியிடம் சொன்னான்.

"24 சைசுலே காட்டன்லே ஷர்ட் இல்லே" என்று தமிழரசி சொன்னாள்.

"ஏய், அங்கே மேலே கட்டு கட்டி வைச்சிருக்கேன். எடுத்துக் காமி."

தமிழரசி தயங்கினாள். பிறகு ஒரு ஸ்டூல் மீது ஏறிப் பரண் மீது வைத்திருந்த ஒரு துணிக்கட்டை எடுத்தாள். இரண்டு ஆண்கள் முன்னிலையில் உயரத்தில் நின்று, உயரத்தில் இருக்கும் பொருளை எடுப்பது ஒரு கணம் கூச்சமேற்படுத்தியது.

"இது எவ்வளவு?"

தமிழரசி சட்டையின் காலரைத் தூக்கிப் பார்த்தாள். "பதினேழு ரூபாய்."

"ஒரே அழுக்கா இருக்கே?"

"இது பழைய விலை சார். புது விலைன்னா இருபத் தஞ்சுக்குக் கம்மி ஆகாது" என்று முதலாளி சொன்னான்.

"கொஞ்சம் பெரிசாயில்லே?"

தமிழரசி பேசாமல் நின்றாள்.

வாங்க வந்த ஆள் இன்னும் தயங்கியபடி சட்டையைத் தன் மீது போர்த்திப் பார்த்தான்.

“அதெல்லாம் கரெக்டா இருக்கும் சார். அப்படி இல் லேன்னா நாளைக்கு கொண்டாங்க, மாத்தித்தரேன்” முதலாளி சொன்னான்.

“ரொம்ப அழுக்கா இருக்கு.”

“சரி, ஒரு ரூபா குறைச்சுக்கோ.”

அந்தச் சட்டையை விலைக் கொடுத்து வாங்கிப் போனாலும் அவன் ஏதோ தப்பி ஓடுகிறவன் போலத்தான் வெளியேறினான்.

நான்கு நாட்களுக்குப் பிறகு மாலையில் வீட்டுக்குப் போக பிளாட்பாரத்தின் மங்கல் வெளிச்சத்தில் மின்சார ரயிலுக்காகக் காத்திருந்த தமிழரசி யாரோ ஒருவன் தன்னையே உற்று நோக்கு வதை உணர்ந்தாள். புடவையை இழுத்துப் போர்த்திக் கொண்டு வேறுபுறம் பார்த்தபடி நின்றாள். ரயில் வந்தபோது கூட்டத்தோடு கலந்து வண்டியில் ஏறிக் காலியாக இருந்த ஓரிடத்தில் உட்கார்ந்த வன், அவளைப் பார்த்துச் சடாரென்று நிமிர்ந்து கொண்டான். தமிழரசிக்கு எங்கோ அவனைப் பார்த்த மாதிரி இருந்தது. அதே நேரத்தில் அன்றாட வாழ்க்கை நிர்ப்பந்தத்தில் அடையாளமறியாத நிழல்களாக எதிரே தோன்றி உடனே மறைந்து போய்விடும் தோற்ற மாகவும் இருந்தது. ஆனால் அவனுக்கு அவள் திடமான, அடையாளம் கண்டு கொள்ளக்கூடிய நபர் என்பது அவன் முகபாவனை காட்டியது.

வண்டி கிளம்பி சில விநாடிகளுக்குப் பிறகு அவன் எந்த முன்னெச்சரிக்கையும் தராமல், “ஆமாம், எனக்கு ஏன் அந்தப் பழைய ஷர்ட்டைக் கொடுத்தே நீ?” என்று கேட்டான்.

தமிழரசி நிஜமாகவே ஒன்றும் விளங்காதவளாக அவனைப் பார்த்தாள்.

“அதுக்குள்ளே மறந்துடுத்தா? நீதானே எனக்கு 24 சைசு வெள்ளைச் சட்டை வித்தே?”

“நானா?”

அவன் அந்தக் கடைப் பெயரைச் சொன்னான்.

“அங்கே நீங்க ஏதாவது வாங்கினீங்களா?”

“என்னம்மாது? நீதான் பழஞ்சட்டையை என் தலைமேலே கட்டினே?”

“நான் இருக்காது, சார்.”

"நீதான். முதல்லே நாற்பத்தெட்டு ரூபாய்க்கு ஒண்ணு காமிச்சே... அப்புறம் பதினேழு ரூபாய்க்கு இன்னோண்ணு காமிச்சே..."

"ஆமாம். ஆமாம்.'

"அந்தச் சட்டையை எம் பையனே தூக்கி எறிஞ்சுட்டான். போட்டுக்க முடியாது, பழசுன்னான்."

"ஆமாம் சார். அது கொஞ்சம் பழைய ஸ்டாக்."

"அப்பவே சொல்லக்கூடாது?"

"நான் எடுத்துக் காட்டலை சார், ஆனா முதலாளிதான் எடுத்துப் போடச் சொன்னாரு."

"முதலாளிக்கு நல்லது பண்ண எனக்குத் துரோகம் பண்ணிட்டயே?"

"அதைத் திருப்பிக் கொண்டாங்க, சார்"

அவன் பேசாமல் இருந்தான்.

"நாளைக்கே கொண்டாங்க, சார், வேறே எடுத்துத் தரேன். சின்னக் கடைதானே, சார், கொஞ்சம் அப்படி இப்படித்தான் இருக்கும்."

ரயிலில் நான்கு பேர் மத்தியில் இவ்வளவு பேசிவிட்டோமே என்று தமிழரசிக்குத் தோன்றியது. இனிமேல் அவள் பரிச்சயம் கொண்டாடக் கூடியவள் அல்ல என்பது போலச் சுருங்கி உட்கார்ந்து கொண்டாள். ஆனால் பன்னிரண்டு வயதுப் பையனின் தகப்பனுக்கு அது புரியவில்லை. "உனக்கென்ன சம்பளம்?" என்று கேட்டான்.

தமிழரசி காதில் விழாதது போல உட்கார்ந்தாள். ஆனால் அவன் மறுபடியும் கேட்டான். அங்கே அக்கம் பக்கத்திலிருந் தவர்கள் பிறர் பேச்சைக் கேட்கும் அளவுக்கு உற்சாகத்தோடு இல்லை. இருந்தாலும் விஷயத்தை உடனே முடித்துவிடத் தணிந்த குரலில், "நூறு ரூபா" என்றாள்.

"வாரச் சம்பளமா?"

"இல்லே, மாசத்துக்குத்தான."

"மாசத்துக்கா? அந்தப் பொம்பளைக்கு?"

"அவளுக்கும்தான்."

அவன் உதட்டைப் பிதுக்கினான். "ஒரு சித்தாளு ஒரு வாரத்திலே இதைச் சம்பாதிப்பாளே?"

"எங்களுக்கு முடியலியே? இதிலே தினம் சுத்தமா உடுப்பு உடுத்தணும். ஒழுங்கா எண்ணெய் சீவித் தலை வாரணும். அந்தக்

காசுக்காவது ஆகுமேன்னுதான் கடையிலேந்து இவ்வளவு தூரம் நடந்து வந்து ரயில் பிடிக்கிறேன். சீஸன் டிக்கெட்டிலே நாலு ரூபாயாவது குறையுமேன்னுதான்."

தமிழரசி முகத்தைக் கடுமையாக வைத்துக்கொண்டு ஜன்னல் வெளியே பார்த்தாள். இவனிடம் போய் எதற்குத் தன் ஏழ்மையைக் காட்டிக் கொண்டோம்? இன்னொரு முறை கடைக்கு வந்து பழைய சட்டையை மாற்றிக் கொள்ளக்கூட இவனால் முடியாது. இவன் சித்தாள் .வேலைக்குப் போ என்கிறான்! அவள் தயார். ஆனால் யார் அவளைச் சித்தாளாக ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறார்கள்? பத்தாவது முடித்து ஆறு வருஷங்கள் நாய்ப்பாடு பட்ட பிறகு வேறே கதியில்லாமல் தானே இந்த நூறு ரூபாய்க்குப் பொம்மைபோல முகத்தை வைத்துக் கொண்டு நாளெல்லாம் கால்கடுக்க நின்று கொண்டு அந்த வாசனை பீடாக்காரனின் 'ஏய், ஏய்' பேச்சைக் கேட்டுக் கொண்டு காலத்தைத் தள்ள வேண்டியிருக்கிறது? சித்தாள் வேலைக்குப் போ! இந்த ஓட்டைப் படிப்பு ஏற்படுத்தின முக மாற்றத்தைக் கண்டு வேலை கொடுப்ப வன் உடலரிப்பு தோன்றுகிறபடி பார்க்கிறானே தவிர, அவளை ஒரு உழைப்பாளியாக எங்கே பார்க்கிறான்? அந்த விதத்தில் இந்த சேட் எவ்வளவோ மேல். அவனுக்கு அவளும் லலிதாவும் டீ கொண்டு வந்து கொடுக்கும் பையனும் சரி. எல்லாருக்கும் ஒரே மாதிரியான ஏய் ஏய்தான்.

தமிழரசி சற்றுக் கோபம் தணிந்தவளாகத் தன்னிடம் சட்டை வாங்கின ஆளைப் பார்த்தாள். அவன் கண்களை மூடிக்கொண்டி ருந்தான். அவனும் அதிக வசதி படைத்தவனாக இருக்க முடியாது. பெரிய கடைகளில் காலடி எடுத்து வைக்கக்கூட அவனுக்குத் தயக்கமாயிருக்கும். அவள் வேலை செய்வது போன்ற கடைகளே இவர்களை நம்பித்தான் தொழில் நடத்துகின்றன. இவனிடம்போய் இரண்டாம்தரச் சரக்கைத் தள்ளிவிட வேண்டியிருக்கிறதே?

தமிழரசி அடுத்த ஸ்டேஷனை ரயில் நெருங்கும்போது எழுந்து கொண்டாள். ரயில் நின்று அவள் கீழே இறங்கும்போது அந்த ஆளை மீண்டுமொரு முறை பார்த்தாள். அவன் தூங்கிக் கொண்டிருந்தான்.

1984